# 15
# அங்குசம்

அவள் மீண்டும் சலித்து நின்றாள்.

பின்னே என்ன அவர்கள் இருவருக்கும் இருந்த பிரச்சனை சுதந்திரம்தான்! அது இல்லாமல் இருந்தால் அவனும், அவளும் இந்நேரம் ஒன்று சேர்ந்து குடும்பாமாகி குழந்தைகள் பெற்று வாழ்க்கையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டிருப்பார்கள். இரண்டு பேருமே அதில் சளைத்தவர்களில்லை. வாழ்க்கையின் பொருள் சுதந்திரம்தான் என்று சாதித்தார்கள். அதுதான் சுதந்திரமற்றுப் போனார்கள்.

அந்த பஸ் ஸ்டாண்டில்தான் எத்தனை நேரம் நிற்பாள்? போகிறவன் வருகிறவன் எல்லோருக்கும் அவள் பார்வையானாள். பளிச்சென்று இருந்தால் பார்ப்பவர்கள் மீது என்ன குற்றம்? மின்னி சிலை மாதிரி இருப்பாள். பார்க்காமல் தப்ப முடியாது. அவனுக்கு இது புரியாது. அந்த ஊர் அவளுக்குப் புதிது. அந்த ஊரார் அவளுக்குப் புதியவர்கள். மனிதர்கள் புதியவர்கள். ஆனால் அவளை அங்கே எல்லோருக்குமே தெரிந்து போன ஒரு பழைய விஷயம் ஆகி பிரபலமும் ஆகிவிட்டாள். அதுவும் கசந்தது அவளுக்கு.

பஸ்களில் பயணம் செய்து அந்த ஊருக்கு அங்கிருந்த ஒரு அரசு அலுவலகத்தில் வேலை செய்தாக வேண்டும். கௌரவமான லைட் கலர்களில் புடவை. நுணுக்கமான அழகான அலங்காரம். திகட்டாத மென்மையான நடையுடை பாவனைகளை யார்தான் விரும்பமாட்டார்கள். மெல்லிய குடை பிடித்து ஒசிந்து நடந்து அவள் பஸ் ஸ்டாண்டில் வந்து சேர்வதை எல்லோருமே எதிர் பார்த்தது போலவே இருப்பார்கள். கண்டக்டர்கள் புன்னகைப்பார்கள். தேவையில்லாமலேயே போர்ட்டார்கள் உதவிக்கு வருவார்கள். மெல்லிய சிரிப்பைத் தந்து விட்டு வழக்கமாக ஏறும் அடுத்த பஸ்ஸில் ப்ளாட்ஃபாரத்தில் போய்நிற்கும் போதும் பின்னாலிருந்து பத்திரிகை கடைக்காரன் இவளுக்காக சொல்வான். ''பஸ் இப்பதாம்மா போவுது.''

அவள் அந்த பஸ்ஸையும், அதற்கடுத்த பஸ்ஸையும் கூட தவறவிடவே காத்திருப்பதும் அவர்களுக்குப் புரியும். ''கார் இன்னும் வல்லீங்களாம்மா?'' பூக்கடைக்காரர் வழக்கமாக நீட்டும் ஒரு முழம் ஜாதி மல்லிகையை நீட்டயபடியே கேட்டார். அவருக்குத் தெரியும் அவன் இப்போது வரமாட்டான் என்று. அவர்கள் எல்லோருக்குமே தெரிந்த விஷயத்தை தெரியாத மாதிரி பேசி அவளை ஏதோ செய்து விடுகிறார்களே. உண்மையில் பெரிய அவமானமாகத் தானிருந்த அந்த விஷயம் ஏன் அவளுக்கு இன்பமாகவும், வெட்கமாகவும், சிரிக்கவும், நாணவும், கோணவும் உதவியாக அவர்களுடன் உறவு கொள்ளவும் காரணமாயிருந்தது!

வானம் கறுத்து வந்தது. மின்னி ஒதுங்கி நின்றாள். சூல்கொண்ட மேகம் நடு வானத்தில் கருக்கும்மென கூடிக்குவிந்து சூரிய வெளிச்சத்தை உடைத்து விசிறியதால் பூமி பளிச்சென்று ஒரு வித ஊமை வெளிச்சத்தால் அதிகப்பட்டது. அவனைக் காணோம். சந்து முனையில் வந்து காத்திருக்கும் அண்ணா முகத்தைப் பார்க்க பயமாய் இருக்கும். நாராயணனுக்கும் 'இது' எல்லாம் தெரியும். முதலில் பதினெட்டாம் வயதில் மின்னி அவனிடம் உதை வாங்கியபோது அஞ்சாமல் சொன்ன அதே பெயர்தான் ரத்தனராஜ்!

''இப்படிக்கூட பேர் வைப்பாளோ? ரத்தனராஜாமே! வெள்ளிராஜ்ன்னு வெச்சினுடறது தானே!'' என்று கத்தினான் நாராயணன். நாராயணனிடம் அடி வாங்குவதும் மின்னிக்குப் புதிதல்ல. கண்டதற்கும் உதைப்பான். பெரிய பெண்ணான பிறகும் கூட அவனிடம் அறைவாங்கி அழுது கொண்டிருப்பது அவள் வீட்டு வழக்கம்தான். அப்பா ரிட்டையராயாச்சு. அவள் எட்டு வயசாகும் போதே! வீட்டில் எப்போதும் சும்மா உக்காந்திருந்து அம்மாவுக்கு கறிகாய் நறுக்கிக் கொடுத்து, வீட்டு வேலைகளை எல்லாம் செய்து, ஜபம் சொல்லிக் கொடுத்து வந்த அப்பாவைத்தான் அவளுக்குத் தெரியும். நாராயணன்தான் வீட்டு ஹெட் ஆஃப் டிப்பார்மெண்ட்! அடுத்தவன் சுப்ரமணியன், ரெயில்வே கிளர்க்! வீட்டில் மொத்தம் பத்து உருப்படி. மின்னிதான் ஐந்தாவது பெண். மூன்று பேர் உலகில் வாழாமல் மேலோகம் போய் விட்டார்கள். பெண்களில் நாலுபேரையும் கரை ஏத்தியவன் நாராயணன்தான். பாவம் தலை நரைத்து நாற்பத்தைந்து வயது தாண்டி முக்கால் கிழவனாய் அந்த வீட்டை முதுகு கொடுத்துத் தாங்கியே கூன் விழுந்து விட்டான். நேரத்தில் கல்யாணம் பண்ணியிருந்தால் நாலு பிள்ளை பெற்று பேரனும் எடுத்திருப்பான். காலம் அவனை உடைத்ததேயொழிய மறுபடி வார்க்க முடியவில்லை. மின்னி குழந்தையாயிருந்த போதிலிருந்தே அவனிடம் உதை வாங்கி வளர்ந்தவள். ரத்தன்ராஜ் பற்றி அவளிடம் நாராயணன் கேள்விப்பட்டதும் கன்னத்தில் அறைந்தான். உலகம் ஒரு கணம் இருண்டது அவளுக்கு. உதடு கனிந்தது. அதே பெயரை, மறுபடி நாராயணனுக்கு ரத்தம் உதடுகளில் கசியச் சொன்னாள் மின்னி. ''ரத்தன்ராஜ்'' - ''அம்மா'' வயிற்றில் பிடித்துக் கொண்டு அழுதாள்.

''யாருடீ அவன்? சொல்லுடி! வேறு சாதிப் பயகிட்டே ஆசப்பட்டேங்கிறேயேடீ! வெட்கமில்லாம பேரே வேற சொல்றேயேடீ தேவடியாமுண்டெ! கட்டால போறவளே!''

அப்பா நிச்சலமாய் தூணில் சாய்ந்து நின்று ஒற்றைக் காலால் உந்திக் கொண்டு மேலே பார்த்துக் கொண்டு நின்றாரே ஒழிய வேறொன்றும் பேசவில்லை.

''அவன் என்ன ஜாதிடீ! எந்த ஜாதி?''

சமுதாயத்தில் இப்போது ஜாதியினை மீறுவது ஒரு பெரிய சீர்திருத்தமாகிப் போய்விட்டது. மின்னியை இன்று ஆதரிக்காதவர்களே இல்லை. அவள் கல்லூரியில் அடிவைத்த போது, அம்மா அவளுடனே காவலாய் காலேஜ்வரை வருவாள். நாராயணன் பஸ் ஏற்றி விடுவான். தனியே எங்கும் விடமாட்டார்

கள் அவளை! காவல்தான்! வீட்டுக்குள் வந்ததும் ஆத்திரம் தீர அடிப்பது நாரா யணனுக்கு வழக்கம்.

பளிச், பளிச்சென்று அறை விழும்போது சமையல் உள்ளில் அம்மா கதறு வாள். அடி வயிற்றில் தீ பற்றும் மின்னிக்கு! தெரு திரும்பும் போது எங்கி ருந்தோ ரத்தன் உடனே சைக்கிளில் தோன்றுவான். நாராயணன் எரித்து விடு கிற மாதிரி பார்த்தபடி மின்னியின் கையைப் பிடித்து வேகமாய் வீட்டுக்கு இழுத்து வந்து மயிரைப் பற்றி பலமாக சுவற்றில் ஒரு மோது மோதிவிட்டு பேயறையாய் ஓர் அறை வைப்பான். மூச்சு முட்டும் மின்னிக்கு, அடி வலிக் காது! சொல்லப்போனால் அடி வாங்குவதுதான் சுகம்!

வீட்டு வேலைகளை, தோட்டத்துக்கு தண்ணீர் இறைப்பதை தினசரி பழக்க மாய் வைத்திருந்ததால், நாராயணன் உடம்பு கண்டு கண்டாய் இருக்கும். ஓயா மல் உழைக்கிறவன், நன்றாக சாப்பிடுகிறவன். நரை கண்டவன். தப்பு ஏதும் புரி யாதவன், அடி ஒவ்வொன்றும் இடி மாதிரி இருக்கும். ''அவன் பார்க்கறான்னா நீ ஏண்டி பார்க்கறே? தேவடியா நாயே! தலையை குனிஞ்சுண்டே வான்னா, அந்த தாயழியப் பாக்க அலையறியேடீ! வெங்கங்கெட்ட கம்மநாட்டீ!'' எட்டி வயிற்றில் உதைப்பான்! அம்மா, தலையில் அடித்துக் கொண்டு அழுவதை விசித்திரமாகப் பார்த்துக் கொண்டு நிற்பார்கள் மற்றப் பெண்கள் மைதிலியும், சாந்தாவும்! எல்லோரும் குலைநடுங்கி நிற்பார்கள். அப்பா வழக்கம்போல தூணை உதைத்துக் கொண்டு சாய்ந்து ஒற்றைக் காலில் நிற்பார்.

அப்பாவுக்குப் பேச்சு நின்னு இருபது வருஷமாச்சாம்! ஊனம் கிடையாது! பேசமாட்டார்! என்ன விரதமோ! ஒருநாள் ராத்திரி பயங்கரமாக சண்டை நடந் ததாம் அம்மாவுக்கும், அப்பாவுக்கும். மைதிலிதான் மின்னிக்கு சொன்னது. ''இனிமே உள்ளேயே வர்றதில்லெடீ. இனிமே பாரு! அஞ்ச வந்தா ஏண்டா மானங்கெட்டவன்னு கேளு!'' என்று கத்திவிட்டு வெளியே போனாராம் நடு ராத்திரியில்! அதற்குப் பின் அப்பா நடுமுற்றத்தில்தான் நிற்பார். வீட்டுரேழி தாண்டி உள் கூடம் வந்து மின்னி பார்த்ததேயில்லை.

தனியாய், என்றைக்காவது வீட்டுக்கு காலேஜியிலிருந்து வந்ததும், நாரா யணன் கேட்பதும் ஒன்றாக நிகழும். மின்னி பயந்து ஒதுங்கினாலும் விட மாட் டான். அப்பா தூணில் உதைத்துக்கொண்டு பாராத பார்வையாய் இருப்பார். அம்மா ஒன்றும் கேட்க மாட்டாள். கல் மாதிரி நிற்பாள் மின்னி. மைதிலியும், சாந்தாவும் அழுவார்கள்.

''மாப்பிள்ளை சந்து முனையில் நின்று கொண்டிருந்தானே! பாத்தாச்சா? பேசியாச்சா?''

''.........''

''கொன்னுடுவேண்டி வாயத்தெற! சித்த முன்னாடி பாத்துட்டுத்தான் வந் தேன்! சொல்லு!''

''..........''

''மொளைச்சு மூணெல விடல்லே உனக்கு! அதுக்குள்ள ஆம்படையான் வேணுமாமில்லே?''

.......அடி விழப்போவது தெரிந்தும் அமைதியாகிப் போகும் மின்னியைத் தாங்க முடியாது நாராயணனுக்கு! வெறி பிடித்து விடும். அடித்து நொறுக்கு வான். இரண்டு கால்களுக்கு இடையில் அவளைத் துவைத்து எடுப்பான் - அந்த வீட்டில் யாரும் தடுப்பதில்லை. ''சாதிகெட்ட பயலெத் தேடிண்டு போவியா?'' என்று சாத்தும்போதும் ஆத்திரம் அடங்காது அவனுக்கு. ரத்தம் கசிய ஊமைக்காயங்களுடன் இரவு மிகச் சுதந்திரமான சுகம் மின்னிக்கு அனு பவமாவது நாராயணனுக்குப் புரியாத தனியுலகம்! சூத்திரன் ரத்தன்ராஜ்! ஆம் அவனிடம்! எப்படி இது? இன்னும் புரியாத இன்பம் அது! ரத்தன்ராஜிடம் சிக் கும் போதும் நாராயணனிடம் சிக்கும்போதும் சிதைந்து போவது மின்னியின் சுகம். ரத்தன்ராஜின் அவசரம், ஆத்திரம், வேகம் இவைகளில் சிக்கி அலைப்பு றும்போதெல்லாம் நாராயணனின் உடம்புதான் மின்னிக்கு ஞாபகம் வரும். தூண் மாதிரி இரண்டு கால்களிடையே அவளைப் போட்டு கைகளால் அறைந்து இனிமே போவியோ? செய்வியோ, இனிமே பண்ணுவியோ? போவியோ அவனோட?'' என்று நாராயணனின் கரங்களின் வலிமையை ஒரு பெண்ணாய் அறிவதில் வேதனை மட்டுமல்ல. அதைத் தாண்டிய ஏதோ ஒரு ஆண்மை அனு பவப்பட்டுக் கொண்டேயிருந்தது. ரத்தன் ராஜைப் போலவே நாராயணன்!

ரத்தன்ராஜும் அவளை நாராயணனைப் போலவேதான் அணைத்தான். பகலில் பலருக்கு மத்தியில், பஸ்களில், ரயில்களில். இரவில், பாதை ஓரங்க ளில், வீட்டு வேலிக்கருகில், சில வேளைகளில் உயிரே போய்விட்டால் தேவலை என்றிருக்கும். ரயில்களில் போகும் வேளைகளில் பலருக்கும் மத்தி யில், பகல் இரவு என்று அறியாத பேதமில்லாத அணைப்பு! யாரும் வித்தியா சம் காணமுடியாது. சாதாரணமாய் பக்கம் பக்கமாய் இருந்தே உரசி தீ கனன்று நசுங்கும் அந்த வேளைகளின் இரக்கமற்ற வெறும் கசங்கல் பயங்கரமாய் நாரா யணனையே நினைவூட்டி பயங்கரம் தரும். வெட்கமும், அவமானமும் தாங்க முடியாது. சாவு நினைவு வரும்போது உடம்பு உடம்புடன் தவிக்கும். மின்னி கிறங்கிக் கிடப்பாள். ரத்தன்ராஜின் தோள்களின் மீது வெட்கமற்றுச் சாய்ந்து கிடப்பாள். யாரும் தப்பு கண்டுபிடித்து விடமுடியாது. இக்கொடும் உறவில் சாவு மட்டும் வாராது இனிக்கும்!

ரத்தன்ராஜுக்காக காத்திருக்கும் நேரம் எல்லாம் பயமும், சந்தோஷமும், ஆச்சரியமும்! சந்திக்கும்போதோ துடிப்பும், தவிப்பும், வேதனையும். சந்தித்த பின்போ ஆக்ரமிப்புதான்! சண்டை, அழுகை, ஆத்திரம் எல்லாம் அதன் பின் தான்! வெட்கம் கெட்ட ஆசை! பல இரவுகள் அவளைத் தின்னும் தனிமை கொடுமை!

''நேத்து ஏண்டீ வல்லே?''

''அண்ணா கூடவே வந்தான்?''

''அண்ணாவெயா கட்டிக்கப் போறே?''

''ச்சீ! இது மாதிரி பேசாதீங்கன்னு எத்தனை தடவை சொல்லியாச்சு உங்க ளுக்கு?''

''பின்னே அண்ணா அண்ணாங்கிறியே அவனையா கட்டிக்கப் போறே? தப்பா?''

''அசிங்கமாப் போசாதீங்க! நிறுத்துங்க!''

''நாலு மணிக்கே வந்து ஏழு மணி வரைக்கும், இந்த பஸ் ஸ்டாண்டுல காத் துக்கிட்டு உனக்காக ராத்திரி....''

''என்ன ராத்திரி?''

''உன்னெய....சொன்னா பேசப்படாதும்பெ.....வாண்டாம்.''

''இதுதான் பேசுவேளா எப்பவும்!''

''நீ என்னிக்கு அதுக்கு ரெடி?''

''எதுக்கு?''

''என்னோட வர!''

''ஐயோடீ! என்னாலெ முடியாது!''

''இப்படியே இரு. கெழவியானப்புறம்தான் நாராயணன் விடுவான்!''

''ச்சீ. அசிங்கமா பேசாதீங்க''

''இதுல என்னடீ அசிங்கம்? அவன் உன்னை விடப் போறதில்லை!''

''எங்க வீட்ல நான் கடைசி! என்னை இஷ்டம் போல விட்டுடுவாளா?''

''அப்ப ஊறுகா போட்டு வெய்யேன்!''

''அசிங்கமா பேசாதேங்கன்னு சொல்றேன்னோல்யோ?''

....நீண்ட மௌனம் தொடரும். அவர்கள் வரவேண்டிய பஸ் வந்து நிற்கும். உடனே ஏறுவார்கள் இருவரும். முன்னால் அவர்களை யாரும் பார்க்க முடி யாது. கடைசி சீட்டின் மூலையில் அவளை ஜன்னல் ஓரம் உட்கார்த்தி விட்டு பக்கத்தில் ஒட்டி உரசி உட்கார்ந்து கொள்வான் ரத்தன்ராஜ்! ஆசை மடைதிறக் கும். உதவாக்கரையான வெறும் பேச்சு!அலப்பும் உதடுகள், கனவுகளை மறைத்து - வாழ்வைத் திட்டம் போடும் அவன் உதடுகள். இருவரின் பேச்சுக் களிலும் இருவரும் இல்லாத இருட்டு. இருவருக்குள்ளும்! பஸ் எப்போது புறப் பட்டது? இருவருக்கும் எப்போதும் தெரியாது. கூட்டம்! மாலைப் பள்ளிகள், கல்லூரிகள் முடிந்து பக்கத்து ஊர்களுக்குப் போகும் மாணவ, மாணவியரின் கூட்டம். பஸ் முழுவதும் வியர்வை மணமும், கசங்கல் மல்லிகையின் நெடியும்.

காலையில் அணிந்த பள்ளி யூனிஃபார்ம் கசங்கும். காற்று மின்னியின் முடியைச் சுருளவிட்டு உலைக்கும். அவன் உடலின் சூடு அவளில் பரவும். யார் இதை இன்பம் இல்லை என்றார்கள்?

பயத்தில் உடல் நடுங்கும். பேச்சு நிற்காது - ஒன்றரை மணி நேரம் வாழ் வின் மிக முக்கியமான பயணம் - உடல்கள் பேசும் நொடிகள் - பஸ்ஸின் இரைச்சல் - ஜனங்களுக்கு மத்தியில், ஊருக்கும் உலகுக்கும் மத்தியில், அவன் விரல்களுக்குள், முதலில் தடுத்துத் தடுத்து, முண்டி, அவள் தோல்வியடைந்து

போனாள். வெட்கம் கெட்டு வெளிச்சத்தில் பஸ் பாயும் அந்த வேளைகளில் பல நாட்களிலும் அவள் அந்த உடலுக்குள்ளே புதைந்தாள். மானமற்ற, வெட்கமற்ற அந்தத் தழுவல்களில் ஆரம்பங்களில் அவளது தவிப்பு அவனது ஆக்கிரமிப்பில் அழுந்திப் போகும். கண்ணீர் மடையுடைய குனிந்து கொண்டு கண்ணீரைத் துடைக்கவும் நேரமற்றுக் கசங்குவாள் மின்னி. அவனும் வெட்கித்தான் தவிப்பான். அதையும் உணர்ந்தும் அவனை எதிர்க்க முடியாது. சரிவாள். பஸ்ஸின் பாய்ச்சலும், கூட்டமும் கண்களை இருட்டும். இரு கரங்களில் அவள் சுருண்டு போவாள். இவைகளைக் கண்ணால் காணவும் யாராலும் முடியாதது ஆச்சரியம் சாதாரணம்.

தஞ்சாவூரில் பஸ் இறங்கும் போது, இருவரும் எதிரிகளைப் போல் எரிச்சலில் இருப்பார்கள். அவள் தவிப்பாள்!

''வீட்டு வரைக்கும் வரவேண்டாம்'' என்பாள் பயத்துடன்.

''நான் வர்றேன்னா அலையிறேன்?'' என்பான் ரத்தன்!

''அசிங்கம்ன்னு தெரிஞ்சும் விடாமே பண்றளே! யாரேனும் பாத்தா? சீ! அவமானம்! சாகலாம் போல வர்றது நேக்கு!''

''என்ன பண்ணிபுட்டோம் அப்டி?''

''இனிமே என்ன பண்ணணும்? போறாதாக்கும்? ச்சேய்! என்ன வேண்டியிருக்கு இதெல்லாம்?''

''ஆமா உரசிக்கிட்டு வந்ததெத் தவிர என்ன பண்ணிட்டேனாம் நானு?''

''வேற என்ன பண்ணணுங்கறேள்? யாரானும் பாத்திருந்தா அடியம்மா அங்கியே சாகணும்!''

''என்னெத்தான் சாகடிக்கிறயே? ராத்திரியெல்லாம் சாவுறேன்டீ!''

''அனாவசியமா என்ன பேச்சு? யாரானும் கேக்கப்போறா. ஊர் வந்தாச்சு தெரியறதோ?''

''எவன் என்ன சொல்றது! நாலா வகுந்துடுவேன்!''

''ஆமா கிழிப்பேள். அசிங்கமா ஏதாவது பண்றது! கேட்டா வகுந்துடுவேங்கறது. வஸ்தாத்துதான்!''

''ஆமாண்டி! வஸ்தாதுதான். ஒருநாள் உங்கண்ணனைத்தான் நாலா வகுந்து தள்ளப்போறேன்!''

''அண்ணா என்ன பண்ணினான் உங்களை? இந்த மாதிரி பேசாதேங்கோ!''

இருட்டில் பிரியும்போது இரண்டு ஓரங்களில் நடந்து போய் திரும்பும் போது, அவள் வீட்டுச் சந்து முனையில் - நாராயணன் காத்து நிற்பதை - இருவரும் பார்க்க - வேறு முனையில் திரும்புவான் ரத்தன். நாராயணனைத் தெரியாதா? வீரன்! காலை நாலு மணி இருளில் எத்தனை நாள்!! காத்துக்கிடக்கும் பஸ் ஸ்டாண்டுகள் எத்தனை! பனியில், இருளில் அவள் வந்ததும் கிளம்பும் முதல் பஸ்ஸில் மூலையில் ரத்தனுடன் மின்னி! எத்தனை வருஷங்கள்!

அவள் எல்லா பரீட்சைகள் எழுதும்போதும், ஒவ்வொரு தேர்வுகள் ரிசல்ட் வரும்போதும், வீட்டில் ஒவ்வொரு அக்காவின் கல்யாணம் நிச்சயம் ஆகும் போதும், ஒவ்வொரு விசேஷம் நேரும் போதும், போகும் ஒவ்வொரு அக்கா வின் பிள்ளைப் பேற்றுக்கும் பொறந்த வீட்டுக்கு - புக்ககத்துக்கு வரும்போது, போகும்போதும் - ரத்தனைத் தேடி வரும் மின்னி! அவள் வித்யாசமான பொண்ணுதான் ரத்தன்ராஜுக்கு, அவனிடம் சொல்லாமல், அவன் சம்மதம் இல் லாமல், அவன் புன்சிரிப்பை வாங்காமல், அவளால் ஒன்றும் செய்வதற்கில்லை, அவளால் அவனில்லாமல் முடியாது.

ஆனாலும் - அவளை அவன் கல்யாணம் செய்ய இப்போது முடியாது! ரத் தன்ராஜ் இப்போது 'கல்யாணம்' கேட்பதில்லை அவளை. இரண்டு பேருமே வருடங்களாய் 'அது' பேசுகிறதேயில்லை. மைதிலி கல்யாண அழைப்பிதழை அவனிடம் கொடுக்க அவனைத் தேடி வந்தாள். ரத்தன்ராஜ் வீட்டு வராந்தாவில் நின்றாள். ''வாயேன்'' என்றான். ''இருக்கட்டும்'' - என்றபடி படி ஏறினாள் மின்னி.

ரத்தன் கையில் அழைப்பிதழைக் கொடுத்து ''அவசியம் வரணும்'' என் றாள். அவன் கையை நெருடினான். அவள் கைகள்! எப்படி சிக்கின அவை? அதென்னமோ அவளும் அப்படித்தான்!

''இத்தானே வேண்டாங்கிறது!''

''பின்னே எது வேணும்?''

''ஏதும் வேண்டாம்''

''உனக்கு வாண்டாம் சரி. எனக்கு வேணுமே'' கை நசுங்கியது.

''அப்பப்பா - சீ விடுங்கோ!''

''நாளைக்கு பார்க்கலாமா?''

''எதுக்கு? வாண்டாமே! உங்க தொல்லையே பெரிய தொல்லையா போய் டுத்து!''

''அது சரி! நாராயணன் விடுவானா?''

''தோ பாருங்கோ. அசிங்கப் பேச்சு வாண்டாம்.''

''சர்த்தாம் போடீ''

''நானா? நீங்களா? ச்சீ...''

விடுவிடுவென்று இறங்கிப் போய் தெருவில் கலந்து போனாள் மின்னி.

அவன் சொன்னதில் என்ன தப்பு? நாராயணன் விடமாட்டான். அவன் உருமல் விடாது. பத்து வருஷமாச்சே! ரயில்களில், பஸ்களில், இன்னும் வேலி யோரத்தில், கோயில் சந்நிதிகளில் - ரத்தன்ராஜ் கால்கடுக்க நின்று கொண்டிருக் கிறான். நீண்ட பயணிகளுடன் பயணம். ஏதாவது ஒரு பஸ் ஸ்டாண்டில் இறங்கி காரணமே யில்லாமல் எதிர்புறமாய் நடக்கிறார்கள். ஆரம்பங்களில் ஜாதி குறுக்கில் பயமாய் இருந்தது உண்மை. வருடம் எத்தனை இதிலேயே கழிந்து போயிற்று! பதின்மூன்று வயதுள்ள பெண்ணாய் இருந்த காலத்திலி

ருந்து ஓயா தொடர் பயணம். இப்போது முப்பது வயது அவளுக்கே தாண்டி யாயிற்றே?

ஏதாவது ஒரு பஸ் ஸ்டாப்பில் அவன் இறங்குவான்.

அவள் இறங்க மாட்டாள் - பஸ் போய்விடும். இதுவும் ஒரு விளையாட்டு! தொடர்ந்து பத்து நாள் - ஒரு மாதம் சந்திக்க வரமாட்டாள் மின்னி. ரத்தன்ராஜு வரமாட்டான். இதுவும் ஒரு போட்டிதான்!

சலிப்பு தீரும் வரை. ஏதாவது ஒரு நண்பர் கல்யாணத்தில் மின்னியைப் பார்ப்பான். அகஸ்மாத்தான சந்திப்பு.

நண்பர்களுக்கெல்லாம் தெரியும். ஒரு மாதிரியான பிணக்கு. ஊடல், உரு கல் அப்புறம் ஒரு வெறுப்பு - ஆனால் பார்த்ததும் வெடிப்பான்.

''என்னடி இங்கே?'' - என்பான் ரத்தன்.

''வரப்படாதா?''

''பெரிய்ய இது பண்ணிக்கிட்டுப் போனியே இப்ப என்ன?''

''வெக்கங்கெட்டுப் போய் பேச்சென்ன வேண்டியிருக்கு?''

''அறஞ்சன்னா பல்லு முப்பத்ரெண்டும் பல்லாங்குழி ஆடப்போய்டும் தெரியும்ல?''

''நீங்க பொம்மனாட்டியா?''

''என்ன?''

''பின்னே பல்லாங்குழி ஆடறேங்கறேளே?''

''வாயே மூடு களுதே''

ரத்தன்ராஜ் என்ன பிறவி. மின்னிக்கு எப்போதும் சந்தேகம்தான். வெட்கம் கெட்டவன். திரும்பித் திரும்பி அவளையே சுற்றிச் சுழற்றுகிறானே.

அவனை அவள் அடியோடு ஒதுக்கி எத்தனை வருடம்? அடேயப்பா! இப்போது அவளால் எதுவும் செய்ய முடியாது! பெண்டாட்டி ஆகவில்லை! அவ்வளவுதான். இன்னும் ஒன்றாய்ப் படுத்து பிள்ளை பெறவில்லை! அதுவும் பஸ்ஸிலேயோ, ரயில் கம்பார்ட்மெண்ட் ஒன்றிலேயோ என்றாவது 'சாந்தி முகூர்த்தம்' ஆகிவிடுமோ என்ற பயம் எப்போதும் மின்னிக்கு உண்டு! 'ரக்ஷஸன்' என்று அவனுக்கு ரகஸியமாய் நாமகரணம் செய்திருந்தாள்.

'அதை' நாராயணனுக்கு ஒவ்வொரு தடவையும் சோதனை செய்து அவள் 'இல்லை' என்று நிரூபித்தாக வேண்டும். சாதாரண வேலைகளைக் கூட நாராயணன் விட்டு வைக்க மாட்டான். பெருமூச்சு விட்டால் நாராயணன் குரல் துரத்தும் மின்னியை.

''என்னடீ மாப்பிள்ளையை விடமாட்டே போலேயிருக்கே?''

''என்னடீ மீனாட்சி! இன்னுமா குளிச்சாறது! உள்ளாற மாப்பிள்ளை வந்து உக்காண்டுருக்கானா, என்ன?''

''ஏண்டா உயிரெ வாங்கறே? தோ. ஆச்சு. தோட்டிண்டு வந்துடறேன்''

''மாப்பிள்ளையெ இன்னிக்கு காத்தாலே பாத்தேனே மார்க்கெட்லெ? ராஸ்கல் - கறிகாய்காரியோட கொஞ்சிண்டு நிக்கறார், பாவம், நீ பார்த்தியானா மூணு நாள் சாதம் உனக்கு எறங்காது. தெரியுமோன்னோ?''

''......''

''வெளில வா! மூஞ்சியப் பாப்போம்!''

''.......''

அமைதி பொறுக்காது அவனுக்கு. வெளியில் வந்து பதில் சொன்னால் நிச்சயம் அடிப்பான். இப்போதெல்லாம் அடி வாங்க தெம்பு இல்லை உடம்பில் பயம்! வலி! அப்பாவா? அம்மாவா? ரெண்டு பேரும் ஒரு விதமான ஊமைகள்.

நாராயணனை மீறி ஓடிப்போக மின்னியால் முடியாது. இதுவரை பிரச்சனை இல்லை. ரத்தன்ராஜை நாராயணன் போய் அவன் வீட்டிலேயே சந்தித்து பதினைந்து வருடம் ஆகவில்லையா என்ன? ரெண்டு பேரும் அலட்சியமாய் எச்சரிக்கையாய் சந்தித்துக் கொண்டார்களாம். ரெண்டுபேருமே அவளை விடத் தயாராய் இல்லை. ரெண்டுபேரும் சண்டை போடவும் தயாராயில்லை. ரெண்டு பேருமே பதுங்கினார்கள். விடத் தயாராயில்லை. ஒரு இரண்டு மணி நேரத்துக்குப் பின் சந்தோஷமாகவே பிரிந்தார்கள். மேம்போக்காய்! ரத்தன்ராஜைப் பற்றி நாராயணன் வந்து சொன்ன அபிப்பிராயம் - ''லேசுப்பட்டவனில்லை அவன்!''

அவனிடம் நாராயணனைப் பற்றி ரத்தன் ராஜ் சொன்னது - ''ம்ஹூம்! தேறாது! அவனும் தேறமாட்டான்!''

வாழ்க்கை மின்னியிடம் இப்படித்தான் விளையாடியது!

பஸ்கள் எப்போதும் போல பல மைல்கள் தூரம் ஓடின.

மாலை இருள் வேளைகளில் கொல்லைப்புறம் மின்னியின் வீட்டுத் தோட்டத்து வேலியோரங்களில் மீண்டும் மீண்டும் ரத்தன்ராஜ் நின்று பேசினான். அவளை நோக்கி இருளில் நீண்ட அவனது கைகளை ஒதுக்க முடியாமல் அவற்றில் சிக்கினாள். இரவுகளில் தூக்கம் அண்டாது புரண்டு புரண்டு அவனை நினைத்துப் பதறும் போது நாராயணனின் அடிகள், உதைகள் அறைகள் தந்த நீலம் உடம்பில் பரவி விஷமாகி கன்னிப் போன வலிகள் ஒன்றினை ஒன்று தின்று தீர்த்து மகிழ்ந்தன. கனவுகளில் கூட நாராயணனே வருவது விசித்திரம் அவளால் வெளியே சொல்ல முடியாது.

பஸ் ஸ்டாண்டில் நிற்கவே வந்திருப்பது போல் வந்து சேர்வான் ரத்தன்ராஜ். பெரும்பாலும் மாலை வேளைகளில் ஏதாவது ஒரு பஸ்ஸுக்கு ரத்தனும் மின்னியும்!

''எப்போ வந்தேள்? ரொம்ப நேரமாய்டுத்தா? இன்னிக்கு ஆஃபீஸ்ல வேலை ஜாஸ்தி''

''என்ன வேலை? ரொம்ப வேலை இருக்குமே! ஓ! சரி சரி!''

''ஆரம்பிச்சிட்டேளா அசிங்கப் பேச்சே!''

''இதிலென்னடி அசிங்கம் ? உள்ளதுதானே?''

''நான் சொல்லாமெ உங்களுக்கு தெரிஞ்சுட்றதோ?''

அவள் பல கதைகள் சொல்வதுண்டு! மின்னிக்கு பொய் வாராது. கஷ்டமே அங்கேதான் ஆரம்பம். மின்னி பைத்தியம்தான்! அப்பா கேட்பார்: '' யாரோ டடீ சுத்திண்டிருக்கியாம்?''

''ரத்தன்ராஜ்ன்னு ஒருத்தர்''

''தர் - என்னடி 'தர்' யாரவன்?''

''அதான் சொல்றேனே அவனோட சுத்தறேன்னு...கல்யாணம் பண்ணிண்டா அவனெத்தான் பண்ணிப்பேன்!''

''அடிப்பாவி''

அம்மா கேட்பாள் - ''ஏண்டி மீனாட்சி! அவனெத்தாம் பண்ணிப்பேன்னு எப்படி சொல்றடீ பொண்ணே! பயில்வான் மாறி ஆளும் உடம்புமா இத்த பெரிசா இருக்கான். பயமாக்கூட இல்லையோடீ நோக்கு?''

''பயம் என்னம்மா?''

''என்ன தைரியமா சொல்றேடீ. அவனெத்தாம் பண்ணிப்பேன்னு! அடி யம்மா.....நேக்கு இப்படி ஒரு பெண்ணா?''

''.......என்னா! அவ கொழந்தை! நீங்க யாரானும் புத்தி சொல்லப்படாதா?'' - எதிராளாத்து கோமதிமாமி திட்டுவாள்....

''ஏண்டீ! அந்த பயலெனா கல்யாணம் பண்ணிப்பேன்னு அடம் பண்றியாம்?''

''ஆமா மாமி!''

''அடிப்பாவிப் பெண்ணே! புத்தி கெட்டுப் போய்டுத்தா நோக்கு?''

''அவன் கிருஸ்துவப் பையன்னா?''

''அதனாலென்ன மாமி! ஏசு கூட சாமிதானே?''

''அவர் ஸ்வாமிதான்! இவன் ஸ்வாமியில்லையேடீ?''

''எனக்கு இவர் ஸ்வாமிதான் மாமி.''

வாயடைத்து நிற்பாள் கோமதி மாமி. இந்தப் பொண்ணு ஐயோ! புத்தி கெட்டுப்போச்சு!

ரத்தன்ராஜ் கேட்பான் அவளிடம் ''என்னடியது? தெருவுல எல்லாரும் கேக்கறாங்க. என்னத்தான் கேக்றாங்க. என்னத்தான் கட்டிக்கப் போறேங்கறியாமே?''

''ஆமாம்!''

''அப்ப - எத்தனை வருஷமா சொல்லிக்கிட்டே இருக்கேன்! வாடீன்னு!''

''ஆமா சொல்றேள்: நானும் சொல்லியாச்சு - என்னால ஓடி வர முடியாது. நீங்க யாரையானும் கல்யாணம் செய்துக்கங்க நீங்க சௌக்யமா இருக்கேன்னுட்டு, எனக்கு இது போறும்.''

''எது போறும்? எது போறும்?''

''இதுதான்!''

பளீரென்று விழும் அறை! - வேலியோரத்தில் நின்றபடி இது நடக்கும் போது முற்றத்திலிருந்து....

....அம்மா கூப்பாடு கேட்கும்- ''அந்தக் கடங்காரப் பயலண்டை அடிவாங் கறாளே! நாராயணா!''

''போய்ப் பாரேண்டா! அடிப்பாவி! கட்டால போறவளே!''

நாராயணன் வேலியோரம் வருவான்.

அவள் எதிர்கொண்டு போவாள். நாராயணனைக் கடுத்தபடி!

''யாரது அவன்தானா?''

''ஆமாண்டா!''

''என்ன திமிர் உனக்கு!''

அவள் எதிர்பார்த்தபடி அறை விழும். கையை முறுக்கி கண்மண் தெரியாமல் உதைப்பான். முதுகில் மிதி விழும். போய்க் கொண்டிருக்கும் வன்னியர் சொல்வார். ''அட விடு நாராயணா! தெரிஞ்சு போச்சு. இனிமே என்ன பண்ண?''

அவளுக்குப் பதவி உயர்வு வந்தது! கண்ணாடிப் பிள்ளையார் கோவிலுக் குப் போனாள். அவனை இப்போதெல்லாம் பார்க்க வேண்டும் என்றால் கண் ணாடிப் பிள்ளையார் கோவிலுக்குத்தான் போக வேணும். இல்லை என்றால் ரத் தன்ராஜின் காரஜிக்குப் போக வேணும்.

காருக்கடியில் படுத்துக் கொண்டு ஸ்பானர்களாலும், சுத்தியலாலும் கார்க ளையும், ட்ரக்குகளையும் தட்டித் தட்டி, முறுக்கி எண்ணை ஊற்றி க்ரீஸ் அடித் துக் கொண்டிருப்பான். அவன் ஒரு இரும்பு வேலை செய்கிற முதலாளி. மெக் கானிக். அவன் அப்பா கொடுத்த தொழில்! சொத்து எல்லாம் அதுதான்.

அங்கே வரக்கூடாது என்பது அவன் உத்தரவு

போகாமல் முடியாது என்று மின்னி அங்கேயும் போய் நிற்பாள்.

சட்டையில்லாமல் உடம்பு முழுவதும் க்ரீஸ்ஸும், ஆயிலும் கறுப்பு மண்டி, மையும் தீற்றியிருக்கும் அவளைப் பார்த்ததும் அப்படி எழுந்து விடுவான்.

''எங்கேடீ வந்தே''

''பார்க்கணும்தான்! வரப்படாதா?''

''பார்த்தாச்சில்ல! போயேன்!''

-வினோதமாய் சிரித்துக் கொண்டு நிற்பாள் மின்னி.

''மீனாட்சின்னு கூப்ட மாட்டேளா?''

''என்னத்துக்கு?''

''சாந்தாவுக்கும் கல்யாணம் நிச்சயமாய்டுத்து?''

''ஓஹோ! அப்புறமா உனக்காக்கும்? கல்யாணம்!''

''என்ன கிண்டலாயிருக்கா? வாண்டாம்பேள் போலிருக்கே!''

''அடப்போடி! நீயும் உங்கல்யாணமும்!''

''அதில்லே - கண்ணாடிப்பிள்ளையார் கோவிலுக்கு வாரேளா?''

''என்ன விசேஷம்?''

''கையை விடுங்கோன்னா?''

''இது வாண்டாமாக்கும்''

''எழவாப்பேச்சு! அட''

''பின்னே ஏண்டி வர்றியாம்?''

''எனக்கு... எனக்கு ப்ரமோஷன் ஆயிருக்கு வந்து....''

''கண்ணாடி பிள்ளையாரண்டை வேண்டியிருக்கேன்.....''

''புள்ள வரம் கேட்டிருக்கியாக்கும்?''

விக்கித்துப் போய் விடுவாள் மீனாட்சி. அவளையே பார்த்து நிற்பான் அவ னும்! அவன் மாதிரி குழந்தை! அவனைப் போலவே பிரம்மாண்டமான சக்தி மிக்க பெரிய குழந்தை! அட அவன் அவள் கேட்டு வந்த பிரார்த்தனை அது தான். ரத்தன்ராஜிடம் பலதடவை சொன்ன ஆசைதான்! அது! ஆமாமா! அவ ளுக்கு ஒரு குழந்தை வேண்டும். கொழு கொழுவென்று சிவப்பாய், அழகாய், ரத்தன்ராஜ் போல வலிமையாய், ராட்சசதனமாய், அவளைக் காப்பாற்ற ஒரு குழந்தை! ஒரே ஒன்றுதான். தாங்க முடியாது அம்மா மாதிரி! நிறைய!

நாராயணன் அவளுக்கு மாப்பிள்ளை தேடிக் கொண்டுதான் இருந்தான். அவளுக்கு இப்போது வயது முப்பத்தைந்து. அவள் சிநேகிதிகள் எல்லாம் பிள்ளை பெற்று எடுத்து விட்டார்கள். நாராயணன் அதைவிட நல்ல வரன் தேடி னான். இன்னும் நல்லது! வந்த வரன்களைத் தள்ளினாள். அம்மா அழுது கொண்டே இருந்தாள். அப்பா! மௌனமாய் பார்த்துக் கொண்டேயிருந்தார். ரத் தன்ராஜின் பஸ்கள் எப்போதும் குறுக்கு நெடுக்குமாய் ஓடிக் கொண்டிருந்தன. சிநேகிதிகள் இப்போதெல்லாம் அவளைக் கேலி செய்வது கூட இல்லை. அவள் தலையில் இரண்டு முடி நரை கண்டபோது அம்மா பின்னி விடும் போது பிடுங்கி கையில் எடுத்தாள்.

சுமுகமாய் இருந்த வேளை ஒன்றில் தைர்யமாய் நாராயணனிடம் சொன் னாள் மின்னி இப்படி, இப்படி -

''தங்கக் கட்டி மாதிரி எனக்கு ஒரு கொழந்தை பெத்துக்கணும்டா''

''உன் மாப்பிள்ளை கிட்ட வாங்கினுட முடியாதுடீ மீனாட்சி! யார் ஆம்ப டையானா வரானோ அவனண்டை கேளு!''

''ஏன் மாப்பிள்ளை கிட்டே கெடைக்காதுங்கறே? எனக்கு ரத்தன் மாதிரி கொழந்ததைதான் வேணும்!''

அவளறியாமல் வந்துவிட்ட வார்த்தைகள் அது. வேணும் என்று சொன்ன தில்லை.

பளிச் பளிச் சென்று விழும் அறைகள் நாராயணனை இனம் காட்டும். தூண்கள் மாதிரி இரண்டு கால்களிடையே கிடந்தாள் மின்னி. கழுத்தை நெறிக்கும் இரண்டு கைக்ள், குப்புறத் தள்ளி முதுகில் நிமிர்த்திப் போட்டு மாரில் அறையும் இரண்டு பலிஷ்ட்டமான கைகள்.

இப்படி (நீண்ட காலம்) இந்த அடி உதைகளில் நாராயணனும், மின்னியும் பத்து நிமிடங்களில் திருப்தியாவார்கள். கசங்கிக் கிடப்பாள் மீனாட்சி.

நாராயணனிடம் மின்னிக்கு எந்த வருத்தமும் எப்போதும் இல்லை. முப்பத்தைந்து வயதாகியும் இன்னும் பிரியாத இருப்பும், உடல்வாகும். இன்னும் எதற்காக காலையில் ஸ்தோத்திரங்கள் முணுமுணுத்து இருள் பிரியுமுன் கிணற்று ஜலத்தின் வெது வெதுப்பில் குளித்த ஈரத்தோடு காக்கும் நோன்புகளும், பட்டினிகளும் விரதங்களும், இரவில் வெகு நேரம் தனியே படுக்கையில் உட்கார்ந்து சொல்லும் கவசங்களும், ஜெபங்களும், புரியாவிட்டாலும் ஓயாமல் முனகும் ஸம்ஸ்க்ருத சுரமஞ்சரிகளும், ஸ்துதிகளும், யாருக்காக...!? நாராயணனுக்கும்தான்! பிறக்காத தன் ரத்தினக் குட்டிக்கும்தான். முரட்டுத்தனமான கசங்கலில் பஸ்களில் இரைச்சலில் நசுங்கி ரத்தனிடம் சிக்கி, நசுங்குவது எதற்காக? உடம்புதினவு அடங்கவா? அவள் பெருமூச்சு அவளைச் சுடும். ''என்னடி இப்படி நீயா மூச்சு விட்டுக்கிட்டு வர்றே?'' என்பான் ரத்தனராஜ். அவள் தியானத்தை சொல்லி முனகிக் கொண்டேதான் வருவாள். 'ஸுப்ரமண்யம் அரம்சாந்தம் கௌமாரம் கருணாலயம் க்ரீடஹாரகேயூர மணிகுண்டல பண்டிதம் ஷண்முகம் யுகஷட் பாகஹீம் ஸ்லாத்யாயுதகர்ணம் ஸ்மிவத்ரத்ன ப்ரஸந்நாபம் ஸ்தூயமானம்...'

ரயில் தஞ்சையை நோக்கி போய்க் கொண்டிருக்கும்.

வழக்கமாய் அவள் அலப்புகிற அலப்பலைக் கேட்டுக் கொண்டிருப்பான் ரத்தன்ராஜ். அவள் பேச்சு மழலை, மனசும்!

''இன்னும் என்ன பண்ணப் போறேள்? போதும் சீக்கிரம் யாரையானும் கல்யாணம் பண்ணிடுங்கோ'' ரத்தன்ராஜ் சிரிப்பான். ''சும்மா இருக்க மாட்டியாடீ!'' என்பான். ரயிலில் இருவரும் அசைவின் ஸ்பர்சத்தில் ஆழ்ந்திருப்பார்கள். ரத்தன்ராஜ் பலதடவை இதையே திருப்பிச் சொல்லியும் இருக்கிறான். இருவருமே ரொம்பவும் தன்னிச்சையானவர்கள்! ரத்தன் எப்போதவாது குடிக்கிறதுண்டு. நன்றாகவே மூச்சுமுட்ட குடித்து தகராறில் கிடப்பான். ரத்தன்ராஜுக்கு ஒரு குடும்பமும் மண்ணும் இல்லை. இனியும் இல்லை என்பான். தனியாகவே குழந்தையிலிருந்து காராஜிலே வளர்ந்தவன். அப்பா பதினைந்து வயதிலேயே போயாச்சு. யாரும் உறவு தேடி வர, கூடி நிற்க எதுவுமில்லை. எப்போதாவது விஸ்கி இருந்தது. மீனாட்சியும் இருந்தாள்.

முதலில் அவளைச் சந்தித்தபோது அவளுக்குப் பதிமூன்று வயது. பைத்தியம் பிடித்தது. இப்போது அவனுக்குப் பாதி மனிதன் ஆயுசு நெருங்கியாயிற்று. பதிமூன்று வயதில் அவளைப் பார்த்த முதல் நாள் ஞாபகம் அப்படியே அச்சாலாய் விழுந்து விட்டது மனசில்! வாழ்க்கையின் பொருள் புரியாத அந்த அவதியிலும் அவளது முதல் ஸ்பர்சத்தை மறக்க முடியவில்லை. மாலைநேரம் தெரு

முனையில் ஒரு அரசியல் கூட்டத்தில், கல்லெறி கலாட்டா போலீஸ் தடியடி! ரோட்டில் ஜனங்கள் பயந்து சிதறி தேங்காய் சிதறுவது போல் பதறி நாலா புறங் களிலும் ஓட, போலீஸ் கண்ணீர் புகை வீச்சு எங்கும் செவிடுபட வெடிக்கிறது. புகை எங்கும், ஜனங்களில் நடுவே மீனாட்சியும் சிநேகிதிகளோடு ஓடி வருகி றாள்.

கீழ வீதியில் தனது கராஜின் வெளியே நின்று கொண்டிருந்த ரத்தன்ராஜ் மீது வந்து ஓடிவந்து புரண்டு விழுந்தாள் மீனாட்சி. இன்னும் இரண்டு பெண்கள் தடு மாறி விழாமல் கேட்டைப் பிடித்துக் கொண்டு நின்றான் ரத்தன். கீழே விழுந்து பதைத்துக் கொண்டிருந்த பெண்ணைத் தூக்கி விட்டான். கூட்டம் மேலும் ரோடு முழுவதும் ஓடிக் கொண்டிருந்தார்கள். தூக்கிவிட்ட பின்னும் இன்னும் ஒருத்தி கீழே கிடந்தாள். கால்கள் பின்னக் கிடந்தாள். அவன், அவளை கீழே குனிந்து கைகளைத் தோள்களைப் பிடித்துத் தூக்கிவிட்டான். அவள்தான்.

அழுது கொண்டிருந்தாள் மின்னி. தலை எல்லாம் மண். கைக்குட்டையால் தட்டிவிட்டு அழாதே என்று ஆறுதலாய் பேச முயன்றான். அதுதான் அவளை முதலில் பார்த்தது. பின் அந்தப் பக்கம் போகும்போதெல்லாம் அவன் கூப் பிட்டு நிறுத்திவிடுகிறான். ஏனென்று தெரியாமலே நின்றாள் மின்னி. பேசும் போது வெட்கமாய் இருந்தது. பேசாமல் அவனைத் தாண்டிப் போக முடிய வில்லை. அவளைப் பார்த்ததும் நின்று போவாள். அவன் அவளை காராஜிக்கு வராதே என்று சொன்னான். அவள் வராமல் இருந்ததில்லை. அவனிடம் என்ன இருந்தது என்று அவள் யோசித்தேயில்லை. அவளைத் தேடி அவன் வந்தான். ரத்தன்ராஜ் என்றாள். சுருட்டிக் கொண்டான். மீள அவள் தயாராயில்லை. அவள் அவனிடம் அழுந்திப் போனாள். அவனும்!

யானை ஒன்று நின்றது தெருவில். ரத்தன்ராஜைப் பார்க்க வேகமாய் போய்க் கொண்டிருந்தாள் மின்னி. எல்லோரிடமும் தும்பிக்கை நீட்டி வாங்கித் தின்றது யானை. யானை எப்போதும் பயம், மின்னிக்கு. சிறு குழந்தையிலி ருந்து யானையைப் பார்த்து பயந்து ஜுரம் வந்து சுகமாகவே அவளுக்கு பத்து நாளாயிற்றாம். அம்மா சொல்வாள். ரத்தன்ராஜை முதலில் பார்த்தபோது அவ ளுக்கு யானையைப் பார்த்து பயந்த கதையாயிற்று. குப்புற விழுந்து கால் பெரு விரலில் காயத்துடன் எழுந்து நின்றபோது பயந்துதான் ஓடினாள். பின்னரும் அந்தப் பக்கம் போகப் பயந்தாள்தான். யானை வந்தது. தும்பிக்கை நீட்டி அவ ளைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டது. பின்னர் இறங்கவே முடிய வில்லை. இப்படி ஒரு கனவு எப்போதும். ரத்தன்ராஜ் முதலில் அழைத்தபோ தும், முதலில் கொண்டுபோனபோதும், கூட அவள் உதறி விலகாத காரணம் என்னவாம்?

யானைக்கு அங்குசம் இல்லை!

இப்போது அங்குசம் வேண்டாம்!

ரத்தன்ராஜும் அவளும் இப்போது கல்யாணம் செய்து கொள்வதை யாரும் தடுத்துவிடமுடியாது. எல்லோருக்கும் தெரியும். நாராயணனும் கூடவேண்டாம் என்று சொல்ல முடியாது. அம்மா எல்லா பெண்களையும் கரையேற்றிவிட்

டாள். மின்னிக்கு வர்ற மாப்பிள்ளையெல்லாம் தட்டிக் கிட்டுப்போய் கொண்டே இருப்பதைத்தான் எல்லோருக்கும் விரும்புகிறமாதிரி இருந்தது. யாரும் எந்த முடிவையும் விரும்புகிற மாதிரி இல்லை. இப்படியே இருக்கட்டுமே அவள்!

ரத்தன்ராஜ் இழுத்துக் கொண்டு ஓடமாட்டான்.

மின்னியும் போகமாட்டாள். போய் என்ன செய்ய?

அப்படியெல்லாம் ஓடுகிற வயசும் தாண்டிவிட்டது அல்லவா?

நண்பரோ, உறவோ யாரும் இந்த கல்யாணத்துக்குத் தடையும் இல்லை சம்மதமும் இல்லை. யானை திடீரென்று மிரண்டது. தெருவில் கடைகள் நொறுங்கின. பாத்திரக்கடைகள் தூளாகின. மிதியுண்டு செத்தவர் பதிமூன்று பேர்! பாகனுக்கு இடுப்பு முறிந்தது. அல்லோலகல்லோலம். கொஞ்சநேரத்தில் அந்த தெரு மைதானமாகி, மயானமாகியது. யானைக்கு மதம். மீனாட்சி ஓடினாள்.

அவள் ஓடிப்போய் நுழைந்த இடம் ரத்தன்ராஜின் காராஜ். நிறைய முன்னால் உடைசல் கார்கள், லாரிகள். ரத்தன்ராஜின் உதவியாட்கள் இஞ்சின்களை மூடிக் கொண்டும் ஓடவிட்டுக்கொண்டும், தண்ணீர்ப் பீய்ச்சி கழுவிக் கொண்டும் இருந்தனர். எல்லோரும் யானை மிரண்டதும் வாசலுக்கு ஓடி கதவைச் சாத்தியபோது அவள் மட்டும் உள்ளே ஓடி வந்தாள். வியர்த்து விறுவிறுத்தபடி கேட்டாள்.

''ஐயா இருக்கிறாரா?''

''உள்ளே இருக்கிறார் போங்கம்மா!''

அவளுக்குச் சலிப்பாக இருந்தது. அவனைப் பார்க்க, பேச... ஆனாலும்... ஆசை! அண்ணா நாராயணனுக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருந்தது. சொல்லத்தான் அங்கே போனது! ஏகப்பட்ட கருநிறம் பூசிக் கொண்டு, ஒரு லாரியின் அடியிலிருந்து வெளியே வந்தான் ரத்தன்ராஜ். கைகளை அழுக்கு வேஷ்டி துணிக்கூளத்தால் துடைத்துக் கொண்டே அவள் அருகில் வரும் அவனைப் பார்த்தபோது பெருமிதமாய் இருந்தது அவளுக்கு! பார்க்கும்போதே இந்த சந்தோஷம் எப்படி வருகிறது? எங்கிருந்து வருகிறது? இதன் அர்த்தம் புரிந்தால், அவளுக்கு அங்குசம் கிடைத்துவிடும், யானைமேல் அம்பாரிதான்!

சுற்றிலும் பார்த்தபடியே அங்கு நின்ற லாரி மறைவில் போய் நின்றார்கள் இருவரும். அவள் கையைப் பிடித்தான். தொடாமல் அவனால் பேச முடியாது. விலக்கியபடியே விலகினாள் மின்னி. விலகவிடாமல் நெருங்கிக் கொண்டான் சூழ்ந்து.

''நாராயணனுக்கு கல்யாணம் நிச்சயம் ஆகியிருக்கு! உங்களண்டை சொல்ல வந்தேன்!'' என்றாள்.

''என்ன சொன்னே? நாராயணனுக்கு கல்யாணமா?''

''ஆமா, ஏன் அப்படி முழிக்கிறீங்க?'' சிரித்தாள் மீனாட்சி.

''வயது ஐம்பத்தஞ்சுக்கு மேலே இருக்காது? உங்க வீடலே மூத்தவன்தானே அவன்?''

''அதனால் என்னா ஆயிடுத்து? பொண்ணு எங்கூடத்தான் வேலை செய்றா... அவளுக்கு இருபது வயசுதான்''

''அடுத்தது உன்னோட கல்யாணமா? யாரு மாப்பிள்ளை?''

''இந்தப் பேச்சு என்னத்துக்கு பண்ணிப்பேளா யாரையாவது?''

''பின்னே உன்னையா பண்ணிக்கப்போறேன்?''

''அப்பாடா! கஷ்டம் தீர்ந்ததுடா பகவானே! பொண்ணு பார்த்தாச்சா?''

''நாராயணனுக்கு பார்த்தமாதிரி எனக்கும் ஒண்ணு பார்த்துடச் சொல் லேன்.''

''வேற வேலை இல்ல பாருங்க! உங்களுக்குப் பொண்ணு பார்க்க வேண் டியதுதான்.''

-எத்தனை பேச்சு, எத்தனை காலம் இப்படியே போயிற்று தெரியாது. கடை சியில் ஒருநாள்...

பஸ் ஒன்றில் வந்து இறங்கி ஏழு மணியளவில் காத்திருந்த அவள் அவ ளைப் பார்த்ததும் எழுந்து கொண்டாள். ''கொஞ்சம் லேட்டாச்சு. ரொம்ப நேரம் காத்துக்கிட்டு நிக்கிறியா? ஆறு மணியாகியும் நான் வர்லேன்னா நீ பாட்டுக்கு தஞ்சாவூர் பஸ் ஏற வேண்டியதுதானே?'' என்று கேட்டான் ரத்தன்ராஜ்.

ரொம்ப அழகாய் நாலுமுடி நரைசுருண்டு காற்றில் பறந்தது அவளுக்கு. அவனுக்கு ஒரு நரை இல்லை. முரட்டுச் சுருட்டை எல்லாம்.

''நீங்க எப்ப புறப்பட்டேளாம் தஞ்சாவூர்ல?''

''அஞ்சே முக்கால்.''

''வந்திருக்கவே வேண்டாம். வேஸ்ட். இப்ப மணி என்ன தெரியுமா? ஏழரை! வந்து புடிச்சிட்டேனே!''

''வந்துதான் புடிக்கப் போறேளாக்கும் இனிமே!'' வானம் கறுத்துக்கூடிக் கொண்டிருந்தது. மழைத்துளிகள் பெரிசு பெரிசாய் விழுந்தன. அடர்த்தியாய்ப் பெய்ய இன்னும் பத்து நிமிடமாகும். தஞ்சாவூர் பஸ் ஒன்று கிளம்பியது.

''மழை வர்றது! இதுல ஏறிடலாமா?'' சாவதானமாய் சலிப்புடன் கேட்டாள் மீனாட்சி.

''ஓ! போகலாமே'' அவனும் சலித்தான்!

''அடுத்த பஸ்ல போனா என்ன?''

''அதுவும் சரிதான். ஆனா சந்துமுக்குல நாராயணன் காத்துக்கிட்டு நிப் பானே! உதை விழுமே!''

''நாராயணன் இப்போ உதைக்கிறதில்லே, பொண்டாட்டிகூட சண்டை போடவே நேரம் போறலே!''

''அவ ஒதக்கிறாளோ என்னமோ?'' மின்னல் வெட்டியது. பஸ் ஸ்டாண்டில் லைட்டுகள் போய் ஒரே வினாடியில் பஸ் ஸ்டாண்ட் இருண்டது. ''ஹோ'' வென்று பேரிரைச்சலுடன் மழை கொட்டியது.

மௌனம்! அவனாலும் தாங்க முடியவில்லை. வருத்தம் தோயப் பேசினான்.

''மின்னி இனிமே என்ன? என்னோட அலையறது; எனக்காக காத்திருக்கிறது எல்லாம் வாண்டாம்! போதும்! இன்னைக்கு கூட வர்றதாவேயில்லை. நான் வராம, வராமலே காத்துக்கிட்டேயிருந்துட்டீன்னா, என்ன பண்ணறதுன்னு நான் நேரமானாலும் பரவால்லேன்னு தான் இங்கே ஏழு மணிக்கு மேலதான் ஏறுவேன்னு தெரிஞ்சும் கூட வந்து சேர்ந்தேன். இனிமே காத்திருக்காதே நா வரலை! நீயும் வராதே போ!''

''ஏன் சலிச்சுப் போச்சா?''

''யார் சொன்னா அப்படியெல்லாம்?''

''பின்னே வராதேங்கறேளே? நான் இனிமே யாரண்ட போவேன்?''

''எதுக்கு யார்க்கிட்டே போகணும்கிறே நீ?''

''எதுக்கும்தான்!''

''என்ன வேணும் இப்ப உனக்கு?''

''கல்யாணம் வேண்டாம்!''

''பின்னே?''

''உங்களை மாதிரி...''

''மாதிரி?''

''ஒரு குழந்தை!''

பயமாயிருந்தது மீனாட்சிக்கு. ஆனாலும் சொல்லியாச்சு. அறை விழப் போகிற மாதிரி. அவனும் ஒரு நாராயணன்தான்.நாராயணன் மட்டும் இதை கேட்டுக் கொண்டாயிருந்தான். அடித்து நொறுக்கி அள்ளினான்! ரத்தன்ராஜும் அதயே...

''யாராவது கல்யாணம் பண்ணிண்டு நேக்கு ஒரு குழந்தை உங்களை மாதிரியே அச்சாவாய் பெத்துக் கொடுக்கணும். இனிமே அவளைக் கல்யாணம் பண்ணிண்டு, சகிச்சுண்டு இருக்க முடியுமா? நான் உங்க கழுத்தை கட்டிண்டு தொங்க மாட்டேன்.''

''பைத்தியம் மாதிரி பேசாதே''. நடக்கிற காரியமா இது? - குழந்தை வேண்டுமாம், கல்யாணம் வேண்டாமாம்.

(சுபமங்களா, அக்டோபர் 94)

